# எதைத் தேடுகிறாய்..?

ஆசிரியர்
'எழுச்சிக் கவிஞர்'
**வ.கோ. சண்முகம்**

தொகுப்பாசிரியர்
**எஸ். ராஜகுமாரன்**



**ஸ்ரீ ஆனந்த நிலையம்**
29/5, ரங்கநாதன் தெரு (முதல் தளம்),
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 2434 6242

# நூல் விவரம்

பெயர்
எதைத் தேடுகிறாய்..?

உள்ளடக்கம்
கவிதைகள்

ஆசிரியர்
'எழுச்சிக் கவிஞர்' வ.கோ. சண்முகம்

தொகுப்பாசிரியர்
© எஸ். ராஜகுமாரன்

முதற்பதிப்பு
1981

மறுபதிப்பு
2007

நூல் வடிவமைப்பு
இரா. செல்வசுந்தரம்

ஒளியச்சு
தமிழ்க்கூடம், சென்னை - 17.

பக்கங்கள்
64

விலை
ரூ. 33/-

வெளியீடு
ஸ்ரீஆனந்த நிலையம்
29/5, ரங்கநாதன் தெரு (முதல் தளம்),
தி. நகர், சென்னை – 600 017.
தொலைபேசி : 2434 6242



தமிழறிஞர் நூல்கள் நாட்டுடமை திட்டத்தின் கீழ்,
2007-2008 தமிழகஅரசு நிதிநிலை அறிக்கையின் வாயிலாக
'எழுச்சிக் கவிஞர்' மாவெண்கோ என்ற
வயலூர்சண்முகம் அவர்களின் நூல்களை நாட்டுடமை
ஆக்கிய தமிழக முதல்வர்
'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர்
அவர்களுக்கு நன்றி!

‘எழுச்சிக் கவிஞர்’
# வ.கோ. சண்முகம்
# வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ.கோ. சண்முகம் |
| புனைப்பெயர்கள் | : | மாவெண்கோ, செம்மல், வயலூார்சண்முகம் |
| பிறப்பு | : | 20.02.1924 |
| பிறப்பிடம் | : | வயலூார் கிராமம், திருவாரூர் மாவட்டம் |
| பள்ளிக்கல்வி | : | போர்டு ஹை ஸ்கூல் - திருவாரூர் |
| கல்லூரிக்கல்வி | : | இண்டர்மீடியட், அண்ணாமலை பல்கலைக் கழகம் - சிதம்பரம் |
| படைப்புகள் பிரசுரமான | : | முரசொலி, திராவிட நாடு, அறப்போர், கலைக்கதிர் |
| பத்திரிகைகள் | : | பிரசண்ட விகடன், கண்ணன், விஜயா, தமிழ் சினிமா, கல்கி, கோகுலம், ஆனந்தவிகடன், மாதஜோதிடம், பால்யன் |

கவிதைகளின் காலம் : மரபுக் கவிதைகள் -
1940 முதல் 1980 வரை
புதுக்கவிதைகள் -
1970 முதல் 1980 வரை

நூல் விவரம் : 1.தெற்கு ஜன்னலும் நானும்
(மரபு மற்றும் புதுக் கவிதைகள் தொகுப்பு)

: 2.டாணா முத்து
(சிறுவர் கதைப் பாடல்கள்)

: 3. சின்னப்பூவே மெல்லப் பாடு
(குழந்தைப் பாடல்கள்)

: 4. எதைத் தேடுகிறாய்?
(தத்துவக் கவிதைகள்)

: 5. நடந்துகொண்டே இரு
(இளைஞர் கவிதைகள்)

: 6. மெழுகுச் சிறகுகள்
(மரபுக் கவிதைக் கதைகள்)

: 7. புதிய தெய்வம்
(புதுக்கவிதை நாவல்)

: 8. அன்னை ஒருத்தி
(அஷ்டலட்சுமி காவியம்)

: 9. உப்பு மண்டித் தெரு
(புதுக்கவிதைச் சிறுகதைகள்)

: 10. வென்றார்கள் நின்றார்கள்
(பல்துறை சாதனையாளர்கள் பற்றிய கவிதைகள்)

: 11. தைப்பாவாய்
(மொழி, பண்பாடு சார்ந்த கவிதைகள்)

: 12. பாருக்கெல்லாம் பாரதம்!

| | |
|---|---|
| இலக்கிய நண்பர்கள் | : தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்,<br>'உவமைக் கவிஞர்'சுரதா,<br>கவி.கா.மு.ஷெரீஃப்,<br>திரைப்பட வசனகர்த்தா ஆரூர்தாஸ்,<br>'டார்ஃபிடோ' ஜனார்த்தனன்,<br>திரைப்படத் தயாரிப்பாளர்<br>இராம.அரங்கண்ணல்,<br>'சின்னக்குத்தூசி' தியாகராஜன் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : 23.07.1983<br>: தளத்தெரு கிராமம், காரைக்கால் (புதுச்சேரி மாநிலம்) |



# பதிப்புரை

'எ ங்கிருந்து வந்தோம்? எங்கே செல்கிறோம்? இடைப்பட்ட வாழ்வுப் பயணத்தில் மனிதகுலத்தில் ஏன் இத்தனை ஏற்றத் தாழ்வுகள்? ஒருபொழுது புன்னகைப் பூத்துக் குலுங்கும் கன்னப் பரப்பில் மறுபொழுது கண்ணீர்ப்பூக்கள் மலர்வதும் ஏனோ?

இன்றையபொழுது யாருக்காக? நேற்று நிம்மதியாக இருந்தவன் இன்று நிம்மதி இழப்பான். நேற்று நிம்மதி இழந்தவன் இன்று நிம்மதி அடைவான். இறைவனின் நியதிக்கு யார்தான் தப்பமுடியும்? என்பார் கவியரசு கண்ணதாசன்.

கடலுக்குக் கீழே என்ன? வானுக்கு மேலே என்னென்ன? அறிவியலின் எல்லைக்கு அப்பால் ஏதோ இருக்கிறதே... அதுதான் கடவுளா?

கடவுள் என்பது உருவமுள்ளதா? தன்மை மட்டுமே கொண்டதா? அன்பும் அறனுமே கடவுளின் வடிவம் என்கிறது தமிழ் வேதங்கள்... தியானத்திலும் தவத்திலும் கடவுளை நேரடியாய் அடையலாம் என்கின்றனர் ஆன்மஞானியர்.

இந்தத் தேடலுக்கு எல்லை இல்லை இத்தகைய ஆன்ம வாழ்வின் கேள்விகள் குறித்த எளிய விளக்கங்களாக இக்கவிதைத் தொகுப்பு நெஞ்சுக்கு நிம்மதி அளிக்கிறது! வாசித்துப் பாருங்களேன்...

- பதிப்பகத்தார்

டாக்டர் சீ.வி.கிருஷ்ணன் M.D., Ph.D., M.C.A.I.,
Senior Consultant, Dept. of Psycho Neuro Immuno Endocrinology (PNIE)
**PNIE Clinic**
16வது தெரு, 4வது பிரதான சாலை,
அண்ணா நகர், சென்னை - 600 040.
தொலைபேசி : 28192889

---

# அணிந்துரை

ஆறுமுகனின் பெயரைக் கொண்ட இவருடைய புனை முகங்கள்: வயலூர் சண்முகம், மாவெண்கோ, செம்மல், நவயுகக் கவிராயர். இவை தாண்டி, இவருடைய கவிதை உலகின் பிரதி பிம்பங்கள் காண்பதெல்லாம் வேறுவேறு - நூறு நூறு முகங்கள்.

இளமையில் வளமையில் ஓடியாடிவிட்டு நடுவயதைத் தொடும்போது, வறுமையில் வாடியபோதும் கவிதையின் வளமை மட்டும் இவரை விட்டு எப்போதும் விலகவில்லை.

தனக்கும் சமூகத்துக்கும், தனக்கும் உறவுகளுக்கும், தனக்கும் நட்புக்கும், தனக்கும்

இயற்கைக்கும் தனக்கும் இறைவனுக்கும் - சோகமாகவும் சுகமாகவும் கவிதைச் சிற்பங்களாய் செதுக்கி வைத்திருக்கும் படைப்புத் தொகுப்பு தான் இந்த நூல்.

ஒவ்வொரு உணர்ச்சியும் நெகிழ்ச்சியாக செரித்து மனதின் சுகமான ஏப்பமாக வெளிவருகின்றன செரிந்த கவிதைகளாய்.

சத்தியத்தின் மொழி கடவுள் தன்மையாகவும் அந்த சத்தியத்தை உபாசிப்பவர்கள் வார்த்தைகளுக்குக் கூட கடவுளின் மெய்ம்மையை கலக்க விட்டு, அவர்கள் சொல்வதெல்லாம் நிச்சயமான நிஜங்களா கின்றன என்கிறார் தனது கந்தர்வமான கவிமொழியில்.

கவிதைகளில் மட்டுமே வந்து கடவுளுடன் உரையாடிய இவர், இன்று நேரடியாகவே அங்கு உரையாட சென்றுவிட்டாலும், தாம் வாழ்ந்த நாட்களில் கடவுளிடம் வைத்த கோரிக்கைகள் ஏக்கத்தின் வெளிப்பாடுகள். வாழ்க்கைப் பற்றிய வாதபிரதிவாதங்கள்.

இவையெல்லாம் விளையாட்டாகவும் ஆச்சரிய மாகவும் அற்புதமாகவும் எழுத்து தீபமாய் இப்போதும் ஜொலிக்கின்றன, காலங்களைக் கடந்து.

கரும்புக்கு பழம் வைக்க கடவுள் மறந்ததையும் இரும்புச் சதைகளை இதயமாக்கியோர் வாழ்வில் கடவுள் வளங்களைக் குவித்ததையும் நாசுக்காக சுட்டிக்காட்டி தனக்குள் நகைத்துக் கொள்கிறார்.

மனிதனின் உயரத்தை மனதின் உயரமாகக் காட்டி, உண்ணும் உப்பும் உடுக்க உடையும் தந்த கடவுள் நம்மைவிட்டு எங்கேயும் போகவில்லை, நமக்குள்ளேயே தான் உறைந்திருக்கிறார் என்பதை வார்த்தை வார்த்தை யாக வடித்து இறைத்தன்மையின் சிறப்பை நமக்கு இயல்பாக உணர்த்துகிறார்.

கடவுளுக்கும் தனக்குமான அந்தரங்கமான நெருக்கத்தை சித்தரிக்கையில் அவர் சொற்களில் காணும் சோகம் நமது இமைகளையும் தழுவிக் கொள்வதைத் தவிர்க்க முடியவில்லை...

*'கவ்வும் சோகம் செத்தொழிய*
*கண்ணீர் ஊற்றை மூடிவிட*
*அவ்வப்போது கோப்பைக்குள்*
*ஆத்மாவை மறையச் செய்கிறேன்!'*

- என்ற இந்த வரிகளில் தனது இறைத்தன்மை இழையோடும் ஆத்மாவையே மதுவாக்கி கோப்பைக்குள் நிரப்புகிறார். இந்த மது தரும் போதை நமது நெஞ்சங்களை நிறைக்கிறது.

ஒரு படைப்பாளியின் படைப்பு வெற்றி என்பது இதைத் தவிர வேறென்ன? தமிழ்ப் பாட்டின் சுவையும் கவிதை நாட்டியத்தின் ஆச்சரியமான அபிநயங்களும் உள்ளத்தைத் தீண்டும் உவமைகளும் ஒவ்வொரு கவிதைக்குள்ளும் கம்பீர அரியாசனம் போட்டு அமர்ந்துள்ளன என்பது கண்கூடு.

இயற்கையில் உயரற்றதாக கருதப்படும் பொருட்களுக்குக் கூட உணர்ச்சிகளை ஊட்டி, அவைகளின் மொழிகளைக் கவிதையாக்கி படைப்புத் தொழிலின் உச்சமான இறைத்தன்மையை எட்டுகின்றன இவருடைய கவிதை எழுத்துக்கள்.

மனிதனுக்குள் கடவுள் தன்மை எப்போதேனும் வெளிப்படும் என்ற உண்மை இரண்டு சகாப்தங்களுக்கு முன்பே இவர் எழுதிவைத்துச் சென்றுள்ள இந்த சிறப்பக்

கவிதைகளில் மின்னல் வெட்டுகின்றன. தூய்மையான உள்ளமும் விழித்திருக்கும் அகக் கண்களும் கொண்டோருக்கு மட்டுமே இதுபோன்ற உயிர்த் தன்மை நிறைந்த வார்த்தைகள் உதிரும் என்பது எனது பணிவான கருத்து.

செம்மொழிச் செம்மலாக தமிழின் கவியாசனத்தில் பிரம்மாண்டமாக அமர்ந்திருக்கும் வ.கோ. சண்முகம் நிச்சயமாக கவியரசர்தான். இந்தத் தொகுப்பை வாசித்து முடிக்கும் எவரும் எனது கருத்துக்கு மறுப்பு சொல்ல இயலாது என்பது எனது தாழ்மையான எண்ணம்.

நான் வணங்கும் கடவுளர்களோடு இவரையும் இணைத்து வணங்குகிறேன் ஆத்மபூர்வமாக...

*நெகிழ்வுடன்*

*அன்பன்*

***சி.வி.கிருஷ்ணன்***

1

## சத்தியம்

எப்போதும் சத்தி யத்தை
இயம்பியே பழகி விட்டால்
தப்பேதும் நேர்ந்தி டாது!
தவறியே பேசும் போதும்
தப்பாது அந்தச் சொல்லும்
சத்தியமாய் ஆகி நிற்கும்!
ஒப்பாக மனமும் வாக்கும்
ஒன்றுதல்தான் மெய்ய தாகும்

உள்ளந்தான் சத்தி யத்தின்
உறைவிடம் ஆகி விட்டால்
எள்ளத்தனை சொல்லும் கூட
ஈடற்ற சக்தி கொள்ளும்!
உள்ளத்தால் சத்தி யத்தை
உபாசிப்போர் சொல்ல னைத்தும்
மெல்லவேனும் பலித்தே தீரும்!
வெறுஞ்சொல்லாய்ப் போய்வி டாது!



அருள்வரம் கொடுப்ப தற்கும்
ஆகாநிலை தருவ தற்கும்
மருள்இல்லா சத்தி யத்தால்
மனம்வாக்கு தூய்மை யுற்றோர்
பெருஞ்சக்தி படைத்துள்ளார்கள்!
பீடெல்லாம் கொண்டுள் ளார்கள்!
அருஞ்சக்தி சத்தி யத்தின்
அப்பியாசமே முதன்மை யாகும்!



## மஹா சாம்ராஜ்யம்

வைர மரகத மாணிக்க மிழைத்த
வனப்பெலாம் பொழியும் மகுடம் மின்னும்,
எழில்மிகு தங்கச் சுவர்கள் சூழும்
அரண்மனை சுமக்கும் மணித்த விசினும்

இனிய பெரிய-
அரசுடைக் கொற்ற
புனிதப் பொன்னா டொன்றுளதே,
அறிவையோ மகனே?
அதுவே, அதுவே

தூய நெஞ்சச் சுடராய்ப் பொங்கும்
அருளின் பணியாம் அன்பின் தொண்டாம்!
அதன்பெயர் புண்ணியம்!
ஆமடா கண்ணே.!



## நானே துதிக்கிறேன்

இறைவா, இறைவா, என்றன் இறைவா,
எப்படி உன்னை
ஏந்தித் தொழுதே
கைப்பிடியில் உள்ள
கற்பூரம் போல
நிறையும் மணத்தை நுகர்ந்து நுகர்ந்தே
நம்புகின்றேன்! நெகிழ்ந்தே மகிழ்கிறேன்
இறைவா, இறைவா, என்றன்தேவா.!
இம்மியேனும்
இமைப்பொழு தேனும்
தம்மில் உன்னைத்
தரிசனம் செய்யாக்
குறைமனக் குறும்பர் கொடுமை யாளர்க்காய்
குனிந்து வணங்கி நானே துதிக்கிறேன்.



## கட - வுள்!

அங்கே இங்கே எங்கோவென.
அதிலோ இதிலோ எதிலோவென
அலைந்தே திரியும் மானிடனே!
இங்கே இதிலே உன்னுள்ளே
இறைவன் உறையும் அதிசயத்தை
ஏனோ நீயும் அறிகிலையே!

இமைகளைத் திறந்தே அதனைப்பார்!
இளைத்துக் களைத்தே அம்மான்தான்
இப்படி அப்படி அலைவ தனை!
அமைவாய் மணக்கும் கஸ்தூரி
அம்மான் நாபியில் மறைந்திருந்தும்
அதனைஉணரத் தவறி யதே!

மேய்ச்சல் திடலை நூறுமுறை
வீணே சுற்றும் மான்போல
வெறுமனே நீயும் உழல்கின்றாய்.
காய்ச்சல் பாய்ச்சல் அற்றதொரு
கருணை வெளிச்சம் படரவிடு!
கடவுளை உன்னிலே கண்டுவிடு!



## ஆயிரம் செவிகொடு!

பாசத் தோடே பகர்கின்றேன்
பக்குவப் பதமாம் பாகாக!
ஆசைத் திருவே! சோதரனே!
ஆயிரம் செவியால் கேட்டிடுவாய்!

மனிதப் பிறவி எடுத்துவிட்டால்
வகையாய் வளர வேண்டாமா?
புனிதச் சூத்திரம் ஒன்றுண்டு!
பொறுப்புடன் கேட்பாய் வளர்வதற்கே!

வளரும் உன்னில் ஒளிவீசும்
வற்றாத் தெய்வச் சுடரொன்று
நெளியா, குறுகா, குனியாத
நித்திய அழகாய்த் தேவையடா!

சொந்த நாக்கிரு சியாற்றத்
தித்திக்கும் ஆப்பிளைத் தேடாமல்,
நொந்திடும் ஏழை வெறுங்கரத்தில்
நொங்குகள் நான்கை வழங்கிடுவாய்!

உன்னுள் சுயநலம் சாக டித்து
'உதவும்' உன்னைப் படைத்துவிடு!
தன்னை மறுத்து, ம்றப்பதுவே
தரணியில் பெரிய யாகமதாம்!

சுயநலம் உன்னில் அழிந்ததெனில்
அணையாய்ப் பொங்கும் உயிர்க்கருணை!
அயலார் வாழ்வில் சொர்க்கம் வரும்
அதுவேயுன் அகலம் அகலமடா!

எழுதும் இன்பக் கவிதைத் தொழிலோ
இயந்திரம் இயக்கும் பெரும்பணியோ
உழுதிடும் தொழிலோ எதுவாயினும்
உன்னை அவைகளில் மூழ்கவிடு!

ராகம் இழையும் இசைத் தொண்டோ
இராப்பகல் துாங்கா நீதியதோ
ஊகம் ஆத்மா உடல் அனைத்தும்
ஒன்றி அவற்றுடன் கரையவிடு.!

வசமாய், வலுவாய் என்றென்றாம்
வாழ்வின் வீதி நெடுகிலுமே
நிசமாய் இப்படி நீநடந்தால்
'நீளம்' அதுவேயுன் நீளமடா!

உண்ணும் உப்பை உனக்களித்தே
உடுக்கும் உடையை உனக்களித்தே
எண்ணாய் எழுத்தாய் உன் அறிவில்
இருக்கும் இறைவனே உன் தலைவன்!

வானாய்க் கடலாய்க் கருமலையாய்
வந்தே போகும் பருவங்களாய்த்
தேனாய், நஞ்சாய், தீ, நீராய்த்
திகழும் கடவுளே உன்எஜமான்.

தேசம், மொழிகள், இனப்பூசல்
சிறிதும் அணுகா அவ்விறையை
ஓசை இன்றி வழிபடுவாய்.
உன்றன் 'உயரம்' அதுவேயாம்!



## இன்றாகவும் இருக்கலாம்

இன்றே இன்றே அந்நாளாய்
இருக்கும் அதிசயம் நேர்ந் திடலாம்!
ஒன்றும் அறியா உணர்வோடே
ஓயா அலுவல் நடைமுறையில்
என்றும் போல அலட்சியமாய்
இருக்கும் போதே அதுநேரும்
நன்றுடை நாளாய் இந்நாளே
நம்முள் மலர்ந்தே சிரித்திடலாம்!

இறைவனைப் பற்றிச் சிறிதேனும்
எண்ணம் கொள்ளா இந்நாளே
உறங்கும் ஊமை வெளியினிலே
ஓர்அடையாளமும் காட்டாத
அறையும் முரசின் சிறுஒலியும்
அண்டக் காதுகளே கேட்காத
குறையுள இந்நாளே அந்நாளாய்க்
குதித்தே வரினும் வந்திடலாம்!

கழுத்தை லறுத்தும் சுமையனைத்தும்
கழற்றி எறிய வரும்நாளாய்ச்
செழித்து வளரும் சுதந்திரத்தின்
ஜீவ மூச்சைத் தரும் நாளாய்
இழித்தப் பழித்தத் துன்பங்களை
இறந்தக் கனவாய்ச் செய்கின்ற
விழிநீர் துடைக்கும் திருநாளாய்
விடிந்த இன்றே அமைந்திடலாம்!

மீண்டும்காண முடியாத
விடாது பழகிய தோழன்போல்
ஆண்டு ஆண்டாய் நம்முள்ளத்தை
அலைத்து வந்த வேதனையைக்
கூண்டுடன் கழற்றி நொறுக்கிடவே
கூப்பிடும் உணர்வை நம்முள்ளே
தூண்டிடும் நாளாய் இந்நாளே
தோன்றும் இன்றே இருந்திடலாம்!

ஆழம் அளக்க இயலாத
ஆத்மக் கருணை விழியாலே
சூழும் சுடரை உமிழ்கின்றத்
தூய ரட்சகன் பாதத்தைத்
தாழப் பணிந்தே புளகிக்கும்
'சாகாத நாளாய்' இந்நாளே
ஊழி ஊழி காணாத
ஓர்நாள் 'இன்'றாய் இருந்திடலாம்!

நாளை அந்திச் சூரியனும்
நகைத்தே எள்ளி மறைந்திடலாம்!
ஊமை இருட்டில் தடுமாறி
உலராப் பாவச் சகதியிலே
ஆள்மேல் ஆளாய் விழுகின்றோர்
ஆயிரம் கோடியில் உயர்ந்திடலாம்!
வேளை மூன்றாய் இருந்திடலாம்!
விழித்தெழு! குழந்தாய்! துதிபாடு!



## எதைத் தேடுகிறாய்?

இறைவா! இறைவா கொஞ்சம் பொறு!
என்னுள் காயும் சினத்தைப் பார்!
குறைத்தோ கூட்டியோ என்செயலைக்
குறிப்பில், கணக்கில் எழுதாதே!

எதையும் சிறிதும் நம்பாமல்
இருப்பவன் எவனும் முரடன்தான்.!
புதைத்து மறைத்தே உணர்வுகளைப்
'பூ'வென உதறிட நானறியேன்!

கசப்பும் கோபமும் இருந்தாலும்
கடவுளே. உனைநான் மறுக்கவில்லை!
பசப்பி மெழுகி வளைக்காமல்
பட்டவர்த் தனமாய்ப் பேசுகிறேன்!

நற்றோர் சொத்தை அபகரித்த,
மண்புழுவை யேனும் கொன்றிட்டக்
குற்றம் ஏதும் செய்தேனா?
கொடுங்கோல் தர்பார் புரிந்தேனா?

கவ்வும் சோகம் செத்தொழியக்
கண்ணீர் ஊற்றை மூடிவிட
அவ்வப்போது கோப்பைக்குள்
ஆத்மாவை மறையச் செய்கின்றேன்!

படையொடு வந்திடும் வேந்தர்களும்
பறித்திட முடியாதென் கோப்பைகளை!
மடையன் கடையன் என்றெல்லாம்
வைதிட முடியாதென் னையுமே.

மகுடம் சூடிய பேரரசும்
மண்ணின் புழுதிக்குச் சமமாகும்!
புகழும் பொன்னைப் பொக்கிஷத்தைப்
புல்லின் சருகாய் நான் மதிப்பேன்!

மின்னும் விழிகளால் விலைபேசும்
மேனி அழகால் வலைவீசும்
சின்னப் பெண்களின் சரஸமெல்லாம்
சேச்சே... எனக்குப் பிடிக்காது!

ஆடிப் பாடும் கேளிக்கை
அரட்டைச் சிரிப்பு, கும்மாளம்
மூடிய என்றன் கதவுகளை
முட்டித் திறக்க முடியாதோ?

இரவுக் கால விடுதிக்குள்
இடறி விழுந்த பாவத்தினால்
முறையாய் எனது ரத்தத்தை
முன்பே விரையாய்க் கொடுத்விட்டேன்

தேளாய்க் கொட்டும் வறுமையதே
திறவா என்மனைத் தாழ்ப்பாளாம்
நாள்பின் னாளாய் நகர்ந்தாலும்
நானொரு ஏழை எளியவனே

வர்ணக் கனவுகளின் சங்கமமாய்
வஸந்த ருதுவும் கவிபாடும்
சொர்ண ஜேததி மலர்களிடை
சொக்கும் ரோஜா நடம்பயிலும்

என்ன இருந்தும் எதுநடப்பினும்
எனக்கவை எல்லாம் பாழ்இருட்டே
சின்ன அறையின் மூலையதில்
தேம்பிச் சோர்ந்தே கிடக்கின்றேன்

என்றன் ஆடை துளிகூட
ஏதோ மாயக் கல்லோடே
ஒன்றிப் பிணைந்து கிடப்பதுபோல்
உணர்ந்தே நானும் உளைகின்றேன்

எனது சிரிப்புகள் அசல்அல்ல
இதயக் களிப்பின் படமல்ல
மனதில் பொய்கும் ஆசைகளும்
மௌன நிழலில் நசித்துவிடும்

உள்ளவர் எதற்கும் உதவா மனிதர்களை
ஒவ்வொரு நாளும் முத்தமிட்டே
வற்றல் களாக உதடுகளும்
வாடி முற்றும் உலர்ந்ததய்யா

எதற்கும் உதவா மனிதர்களை
ஏதும் மதிப்பே அற்றவற்றைத்
துதித்து வணங்கி என்தலையும்
தூசிப் புழுதியாய் போதைய்யா?

வற்றல் வல்லவர் வாசர்களை
ஒவ்வொரு நாளும் முத்தமிட்டே
வற்றல் களாக உதடுகளும்
வாடி முற்றும் உலர்ந்ததய்யா

தொய்ந்து மெலிந்து தள்ளாடும்
கன்றி போன்ற என்னுடலில்-
நந்த அழுக்குக் கந்தைக்குள்
நாயகா நீ எதைத் தேடுகிறாய்...



## கரும்புப் பழம்

கரும்புக்குப் பழம்வைக்கக்
கடவுளவன் ஏன்மறந்தான்?
அரும்புக்கும் மணம்கொடுக்க
அவ்விறைவன் தவறியதேன்?

கற்றெதெதும் விளக்கவில்லை!
காண்பதெதும் உரைக்கவில்லை!
நெற்றியதில் பலசுருக்கம்!
நினைவலைக்குள் வேதாந்தம்!

இரும்புச் சதைகளையே
இதயமதாய்ப் பெற்றவர்கள்
திரும்பும் திசையெல்லாம்
செல்வர்களாய் வாழ்வதுமேன்?

ஏழெட்டுப் பட்டங்கள்
இடுப்பொடியச் சுமப்பவர்கள்,
வாழவைக்கும் கல்வியதில்
வட்டச்சுழி பெறுவதுமேன்?

தனிமனிதக் கோணல்கள்
சமுதாயக் கோரங்களாய்
சுனைமூடும் பாறைகளாய்ச்
சுகவாழ்வைக் கெடுப்பதுமேன்?

நெஞ்செல்லாம் கஞ்சாவாய்
நினைவழிந்த வாலிபங்கள்!
நஞ்செல்லாம் நெஞ்சாக
நடமாடும் அரசியல்கள்!

குள்ளம் குட்டையெல்லாம்
கோபுரமாய்ப் பாவலாக்கள்!
உள்ளங்கள் அனைத்திலுமே
ஊமைப்புண் காயங்கள்!

அம்புலிக்குள் நுழைந்தாலும்
ஆதவனைப் பிடித்தாலும்
வெம்புலியாய் உறுமுகின்ற
வெறிமனிதம் சாகவில்லை!

கற்புக்கும் நோய்நொடிகள்!
கண்பொசுக்கும் ஆபாசம்!
கற்பனையில் புகைமூட்டம்!
கலையுலகே பாலைமணல்!

பாலங்கள் வளரவில்லை!
பாறைச்சுவர் பெருக்கமில்லை!
காலமகள் கதறுலுக்கே
காதலிக்க யாருமில்லை!

சாதிமதச் சழக்குகளின்
சதிராட்டம் ஓயவில்லை!
நீதிமுறை முடமாச்சு!
நேர்மையதில் தள்ளாட்டம்!

துப்பாக்கித் தூங்கவில்லை!
தோட்டம்வயல் குறட்டையிலே!
உப்பதனின் விலையதிலும்
ஒருநூறு இறக்கைகள்!

இத்தனைக்கும் அருமருந்தை;
எளியதொரு மெய்மருந்தைச்
சத்தியத்துச் சரக்கெடுத்துத்
தருமத்தாய் செய்மருந்தை,

வையத்துப் பிணிஅனைத்தும்
வகையாகத் தீர்த்திட்டே
உய்விக்கும் புதுமருந்தை
உள்ளந்தான் தேடுகையில்-

நாயகியாம் என்செல்வி
நாவெல்லாம் தமிழ்த்தேனாய்ப்
பாயிரத்து 'மலர்மிசை'யைப்
பைரவியில் இசைத்திட்டாள்!

அடுத்தகணம் நான்விழித்தேன்
அற்புதத்தைக் கண்டுவிட்டேன்!
படுத்துவிட்ட மானுடமும்
பலம் பெற்றே எழுந்துவிடும்,

ஆயிரத்துச் சொச்சமுள
அருஞ்சுளைகள் கொண்டதொரு
காயகல்பக் கனிக்குள்ளே
கண்டுவிட்டேன் அருமருந்தை!

பொருள்கலவை மருந்தாகப்
புகழ்வடிவோ நூலாக
அருள்ததும்பும் ஞானரச
ஆனந்தப் பழமிதுதான்!

ஞாலத்தின் பிணிபசியை
நனியகற்றும் பழமிதுதான்!
காலமெல்லாம் அழுகாதக்
கடவுட்பழம் 'குறளே'தான்!

கரும்புக்கும் பழம்வைக்கக்
கடவுள்தான் மறக்கவில்லை!
அரும்புக்கும் மணம்கொடுக்க
அவ்விறைவன் தவறிவில்லை!



## பட்ட மரம்

நெட்டை மரம்! - தவ
நிட்டை மரம்!
வெறும் சொட்டை மரம்! - தலை
மொட்டை மரம்! - இனிக்
கட்டை மரம்!

வாழ்ந்த மரம்! - நிழல்
சூழ்ந்த மரம்!
தாழ்ந்த மரம்! - கிளை
வீழ்ந்த மரம்! - இன்றோ
வெற்று மரம்!

கெட்ட மரம்! உயிர்
விட்ட மரம்!
கனிகள் இட்ட மரம்! - யாரோ
நட்ட மரம்!
இன்றோ பட்ட மரம்!



## யார் ?

பொன்திகழும் மாளிகைகள்
சமைத்தவரும் யார்? - அங்கு
போகப்பொருட்கள் பலவும்
குவித்தவரும் யார்? - அவற்றில்
மின்திகழும் கன்னியர்தம்
மேனிதழுவி - காதல்
மிஞ்சச்சுகம் விழைந்து
கொஞ்சுபவர் யார்?
மின்னவிர்நற் பொன்னணிகள்
பண்ணியவர் யார்? - அவை
மெருகுறவே உடலுருகிக்
கருகியவர் யார்? - அந்தப்
பன்னரிய நல்லபணிகள்
தம்மையணிந்தே - நித்தம்
பகட்டித்தி ரிந்துலவி
வருபவரும் யார்?

கண்கவரும் ஆடைபல
நெய்தவரும் யார்? - தையற்
கலைதிகழ்ந த காசுவேலை
செய்தவரும் யார்?
விண்தவழும் மீனினம்போல்
அவற்றையணிந்தே - நித்தம்
மினுக்கிக்கு லுக்கிமிகக்
களிப்பவரும் யார்?
களையெடுத்துப் பயிர்விளைத்து
உழைத்தவரும் யார்?- பயிர்
காத்து வளர்த் துடலம்
இளைத்தவரும் யார்? - வயல்
விளைவினையெ லாம்
பறித்துத் தின்று செழித்தே - உடல்
விம்மிப்பு படைத்துயர்ந்து
கொழுப்பவரும் யார்?

புவனப்ப பரப்பனைத்தும்
பாதை சமைத்தே - உலகப்
போக்குவ ரத்தைஎளி
தாக்கியவர் யார்? - அதில்
நவநாக ரீகவாக னாதிகளிலே - எந்த
நாளும் பவனிவந்து
ஆளுபவர் யார்?

மேதினியெ லாம்வளர
உழைப்பவரும் யார்? - நாடு
மேன்மைபெறத் தம்முயிரை
அளிப்பவரும் யார்? - உடல்
வேதனைகள் ஏதுமின்றி
வீணிலுறங்கி - வாழ்வின்
வெல்லத் தினிப்பையெலாம்
மெல்லுபவர் யார்?

(1955)



## சந்தோஷம்

மதுவருந்தி வருகின்ற
மிகுபோதை களியாட்டம்
மனிதனிடம் நிற்பதுவோ
மூன்றுமணி நேரம் !

புதுக்கத்தி சவரத்தால்
புறாச்சிறகால் தடவல்போல்
பெறுகின்ற சந்தோஷம்
மறுநாளே போகும் !

பொருத்தமுளப் பெண்தேடி
பூமாலை தனைச்சூடிப்
போற்றுகின்ற மனைசுகமும்
ஓராண்டே ஆகும் !

கருத்துமிக்கத் தோட்டமிட்டே
காய்கனிகள் விளைவித்தால்
கணம்தோறும் குதூ கலங்கள்!
காலமெலாம் சந்தோஷம் !



## ஒரே இல்லம்

திருமகளின்
நடனக்கால்கள்; - அன்பு
திதிக்கவரும்
உறவோர் கைகள்;
ஒருமனம்கொள்
நண்பர் தோள்கள் - குருவாம்
உத்தமனின் ஞானச் சுவடி;
பெருங்குடிகுற்றச்
சிறையின்பூட்டு; சாவின்
பிசகாத அம்பு - யாவும்
இருந்தொன்றாய்
வாழும் இல்லம் - நமது
எலும்பில்லா நாக்கின் நுனியே!

- 1953



(கரு: நீதிசாரம்)

## துயிலும் முன்

எத்தனை காடுகள்!
எவ்வளவு அழகு!
இணைந்தும்; நெருங்கியும்;
நிமிர்ந்தும் உள்ளன!
அத்தனையும் கடக்க
விரைகிறேன் நானே!
ஆயினும், ஆயினும்
இதய மூச்சால்
சத்திய மிட்டே
நான்கொடுத் திருக்கும்
தக்கவாம் வாக்குறு
திகளை எல்லாம்
மெத்தவும் மதித்தே
காத்திட வேண்டும்!
மீண்டும் துயிலுமுன்
நீண்டதென் பயணம்!

1963

(ஜவஹர்லால் நேரு, தம் கையால் எழுதித் தமது மேசை மீது வைத்திருந்த 'ராபர்ட் ஃப்ராஸ்ட்' கவிதையின் தமிழ் வடிவம்.) -



## மூத்த பிள்ளை!

அன்பினால் பெற்றெ டுக்கும்
ஆவிநிகர் பிள்ளை யோடே
உன்னையும் பாசம் பொங்க
உரைப்பார்கள் 'பிள்ளை' என்றே!
தென்பாங்குத் தமிழர் சொத்தே!
தென்னையே! உன்னைப் போலே
மன்பதைக்கே தன்னை ஈயும்
மற்றொரு தியாகி இல்லை!

திண்ணிய குறிக்கோ ளுடையார்;
செருப்பகைமேல் பாயும் வீரர்;
புண்ணியம் செய்யும் கையார்;
புரையிலா ஞானி - இவர்கள்
எண்ணங்கள் குனிவதில்லை!
எப்போதும் ஓங்கும்! அந்த
வண்ணமே நீயும் என்றும்
வளர்கின்றாய் வானை நோக்கி!

தனக்குறும் துன்பம் ஏற்றுத்
தமர்க்குறும் துயர்கள் நீக்கும்
மனக்குணம் கொண்ட சான்றோர்
மாண்பினைப் போல நீயும்
மணல்கீறித் தாள்கள் நீட்டி;
மலினநீர் உண்டு வுண்டே
இனிக்கின்ற அமுதைத் தனைய
இளநீராய்த் தருகின்றாயே!

காசுக்கே ஆசை காட்டிக்
கவர்ச்சியாம் அங்கம் காட்டும்
வேசியைப் போலக்; கசப்பு
வேம்பினைப் போல; நாய்கள்;
யாசிப்போர் போல வன்றி
எப்போதும் ஒருமைப் பாட்டை;
நேசத்தைக் கூடும் உறவை
நிசமாக்கும் உன்றன் தோப்பே!

ஓலையால் கூரை யாகி;
ஒப்பனைக் கலையாய் ஆகி;
மாலையாய், கூந்த லாகி
வனப்புறு பொம்மை யாவாய்!
மூலையில் ஒண்டிக் கிடந்து
முழுவீட்டின் தூசு போக்கும்
மேலதாம் பொருளில் நீதான்
மெய்ஞ்ஞானி யாகி நிற்பாய்!

கருணையோ டியற்கை அன்னைக்
காசினி வேட்கை தீரத்
தருகின்ற அமுதே உன்றன்
தகுவிளநீ ராகும்! அதைப்போய்
மருள்போதைக் கள்ளாம் நஞ்சாய்
மாற்றுமோர் கொடுமை கண்டே
வருகின்றப் புயலைத் தின்றே
வாழ்வையே தொலைக்கின்றாயோ ?

சிந்தையைக் காமம் கிள்ளச்
சிறுபுத்திப் புலவன் யாரோ
அந்தமாம் பாவை மார்பின்
அழகுக்கே உவமை காட்ட
வந்தவன், செவ்விள நீரை
வருணித்தக் குறும்பைக் கண்டோ
நொந்துநீ இவ்வி டத்தில்
நெளிகின்றாய்; கோணு கின்றாய்!

தன்னினத்தார் சிலர்பா லுள்ளத்
தகாத செயல்க ளுக்காய்
உன்மேனி முதுகில் முள்ளை
ஒட்டுகின்றார் சிலர்தாம்! அடடா!
என்னதான் உன்றன் பொறுமை!
இப்படிச் செய்த போதும்
சின்னதோர் முனகல் கூடச்
செய்வதில்லை! நீயே தொண்டன்!

இருக்கின்ற செல்வம் யாவும்
ஈந்திட்டும்; வறண்ட போது
சிரிக்கின்ற இதழ்க ளோடு
சேவைக்கே ஆவி தந்து
மரிக்கின்ற பெரியோர் போல
மண்மேல்நீ வீழ்ந்த பின்பும்
எரிக்கின்ற விறகாய் ஆவாய்!
யாருண்டு உனைப்போல் வள்ளல் ?

தேங்காயின் அமைப்பை நோக்கில்
'சிரட்டையே அறிவு! '; அதனுள்
பாங்காக இருக்கும் பருப்பே
'பண்பாடு!'; இவற்றை என்றும்
நீங்காத 'அன்பே' இளநீர்!
நிறைவாழ்வின் ரகசி யத்தைத்
தாங்கியே பேசும் தென்னைத்
தருவே! நீ ஞான ஆசான்!

பிள்ளைகளே ஒருவ ருக்குப்
பெருஞ்செல்வம் ஆன போதும்
சள்ளைகளும் சிலநே ரத்தில்
தருகின்றார்! நீ தான் என்றும்
பிழைகளே செய்வ தில்லை!
கொள்வதோ கொஞ்சம்! வாரிக்
கொடுப்பதில் வள்ளல் நீ தான்!

ஒருகாணி மனையி லேனும்
உன்இனக் குடும்பம் ஒன்றை
அருமையாய் வளர்த்து விட்டால்
ஆயிரம் வளங்க ளோடு
சிறுமையே ஏது மின்றிச்
செம்மாந்தே வாழும் கெட்டிப்
பெருமையைத் தருவாய்! நீயே
பிள்ளைகளில் மூத்த பிள்ளை!



## வருகவே!

பழமை யாவும் விலகவும்
பகைமை யாவும் தொலையவும்
செழுமை யாவும் மலரவே
சீலம் ஐந்துமே - புதுத்
தேதியாய் இவண் வருகவே!

உண்மை யாவும் முழங்கவும்
உரிமை யாவும் புழங்கவும்
வண்மை யாவும் வழங்கவே
வாய்மை என்பதே - புது
வருடமாய் இவண் வருகவே!

வையம் யாவும் தழைக்கவும்
வாழ்வு யாவும் பிழைக்கவும்
ஐயம் யாவும் அழிக்கவே
அன்பெனும் ஒன்றே - புது
ஆண்டென இவண் வருகவே!

பொய்மை யாவும் நீங்கவும்
பூடு யாவும் ஓங்கவும்
தாய்மை யாவும் தாங்கவே
தர்மம் என்பதே - புதுத்
தவமதாய் இவண் வருகவே!



## கேள்வியிலா விடையாகி...

பசியெரிக்கக் குமுறுகையில்
பாலமுதச் சுவைக்கனிகள்
ருசியறிந்தே இதமாக
ஊட்டுகின்ற திருக்கரத்தில்
வசிக்கின்ற மெய்க்கருணை
வாஞ்சையதை வியப்பேனோ ?

இருள்வழியில் தடுமாறி
இடறிவிழும் தருணமெலாம்
அருள்ஒளியை முன்வீசி;
அறவழியில் எனைச்செலுத்தி
மருள்நீக்கும் மெய்க்கருணை
வல்லமையை வியப்பேனோ ?

உள்ளூறும் மனத்தணலாய்
ஓங்கியெழும் சத்தியத்தின்
விள்ளரிய ஆற்றலுறு
வித்தகனாய் எனையாக்கித்
துள்ளவைக்கும் மெய்க்கருணை
சூட்சமத்தை வியப்பேனோ ?

கேட்கின்ற கணத்தேயே
கிரீடமணிப் பொற்குவையை
வேட்கின்ற வெறுங்கையில்
விட்டெறிந்தே நகைத்தென்னை
ஆட்படுத்தும் மெய்க்கருணை
அதிசயத்தை வியப்பேனோ ?

கேள்வியிலா விடையாகிக்
கிட்டியதில் அரிதாகி
முள்வினையைப் பின்தள்ளும்
மூலமுதற் பொறியாகும்
நாள்வாழ்வாம் வினாடிகளின்
நாயகியே அவளன்றோ ?

- 1962

(கவிஞர் மனமுருகி வழிபட்ட வைத்தீஸ்வரன் கோவில் அருள்நிறை 'தையல்நாயகி' மேல் பாடிய கவிதை)



## இன்றும் வா

இழிந்து சிறுத்த மாந்தரை,
ஈரமிலாக்கொடும் வேந்தரை - அன்று
வழிந்தொழுகும் செங்குருதிச் சிலுவையால்
வாழ்த்திய நல் இரட்சகனே! இன்றும் வா!

யுத்தப் பேய்ஊ ளையில்,
உலகம் அதிர்வே ளையில் - உன்
சத்தியத்து வேதஒளிப் புத்த முதைத்
தரணிக்கீய திருமகனே! இன்றும் வா!

விண்பிடிக்கும் பேராசை
வெறிகொடுக்கும் போராலே - இந்த
மண்நடுங்கும் அவலமெலாம் கண்ணொடுங்க
மாக்கருணைச் சுடரொளியே! இன்றும், வா!

இதயம் மரத்த அறிவினால்
இருளின் மகுடம் சிரிக்குதே! - புது
உதயக்கதிர் போலெழுந்து, அருட்கரத்தால்
உலகணைத்த அன்புருவே! இன்றும் வா!



## தண்மதியில் நாமும்...!

‘பங்களாதேஷ்’ இதுவோ இன்று,
பால்கிண்டி வாயில் உள்ளச்
சிங்கத்தின் குட்டி! அன்பின்
சீதனங்கள் பெற்றுக் கொள்ளும்
தங்கத்துப் பிஞ்சு! ஞாலம்
தாலாட்டும் செல்லப் பிள்ளை!
வங்கத்தின் உதிரம் பெற்ற
மாசிலாத் தியாகச் சிற்பம்!

ஏழையாய் ஆக்கப் பட்டோர்
இரத்தமாய்ப் பொழிந்த கண்ணீர் -
கோழையாய் நரியாய் ஆட்சிக்
குரங்கதாய் மனதை; தோட்டாப்
பேழையாய் ஆக்கிக் கொண்டப்
பேடிகள், பேய்கள் எல்லாம்
கோழைகளாய்ப் போக வைத்த
முதிர்வீரக் கொத்தே அதுவாம்!

சம்பளம் கொடுத்தால் கூடச்
சைத்தானே செய்யக் கூசும்
வம்பெலாம்; வதையெலாம் செய்தே
வனிதையர் கற்பைத் தின்றக்
கும்பலாம் நரக நாய்கள்
குரல்வளையை முறித்தெ றிந்தே
உம்பர்கள் பாட்டை மீட்டும்
உயிர்வீணை; ராகத் தென்றல்!

தீப்புயல்தான் சினந்து வீசத்
தீய்ந்துதிரும் மலர்கள் போலக்
காப்பிடம் இமய மாதா
கரங்களின் நிழல்தா னென்றே
கூப்பாட்டில் உலகே தேம்பக்
கோடியாய் வந்தோர்க் கன்றுச்
சாப்பாடாய்; உடையாய் பரிவைச்
சமைத்தளித்தோம்! காத்தோம்! உயர்ந்தோம்!!!

அகண்டமா நெடும்பு வியையே
அறுத்த றுத்துத் துண்டு போடும்
'பகல்கனவு வாதிக் கெல்லாம்
பங்களாதேஷ அ - ஆ' ஆகும்!
நெகிழ்கின்ற மனித நேய
நிரவலே, பரிமா றல்தான்!
மகிழ்கின்ற தெய்வீ கத்தின்
மதமாகும்! மார்க்க மாகும்!!

யுகங்களை அடுக்கி வைக்கும்
காலமே செவி கொடுப்பாய்!
அகதிகளைச் சுமந்த தேபோல்
அப்பங்களா தேஷின் உறவில்
புகழினைச் சுமப்போம்! நட்பைப்
புடமிட்டுப் பார்த்து விட்டத்
தகுதியாம் மெருகால் அந்தத்
தண்மதியில் நாமும் சுடர்வோம்!

- 1972



## தாயே வருகிறேன்!

இமயம் - குமரி இடைப்பட் டிலங்கும்
இனியநல் பாரத அன்னையே! வணக்கம்!
இமிழ்கடல் மூன்றைப் பட்டாள மாக
எய்திய தேவி! வணக்கம்! வணக்கம்!!

எத்தனை எத்தனை இடர்கள் கடந்தனை!
எத்தகு எத்தகு இருள்கள் கழுவினை!
எத்தனை ஆயிரம், தத்துவம் தந்தனை!
எழில்உமிழ் தீபமே! வேத வித்தகீ!

மானுடம் தழைக்க மகத்துவம் பெய்த
"மகாத்மா" வென்னும் அருளின் கொழுந்தை;
வானகப் பிள்ளையை ஈன்ற பேறால்
வற்றாப் புகழினைப் பெற்றனை அன்றோ ?

வர்க்கப் பிளவுகள்; வர்ணப் பிரிவுகள்;
வளத்தால், வறுமையால் வந்த வரப்புகள்;
தர்க்கப் பிணக்குகள் எல்லாம் கரைந்தே
சங்கமம் ஆகும் சமரசக் கடல்நீ!

ஈஸ்வரன், அல்லா, ஏசு என்னும்
அனைவரும் உனக்கு ஏசு கடவுளே!
சாஸ்வத ஆன்ம நேயம் ஒன்றே
சர்வ காலப் பூஜையாய்க் கொண்டாய்!

அள்ளி அணைக்கவே அறிவாய் நீதான்!
அதட்டி அடக்கவே அறியாய் நீயே!
பள்ளிகள் யாவும் ஓதும் பாடம்
பஞ்ச சீலத் தாரகம் ஒன்றே!

கங்கை என்றொரு ஞானப் புனலைக்;
காவிரி என்றொரு கருணைப் பெருக்கை
மங்கலச் செழுமையின் சங்கீதங்களாய்
மலர்ச்சியாய்க் கவிமையாய்க் கொண்டனை தாயே!

தருமம் உன்றன் தலைமகுட மாகும்!
சத்தியம் உனது சிம்மா சனமாம்!
கரும வீரமே கையமர் செங்கோல்!
காக்கும் அறமே கொற்றக் குடையாம்!

சோலை மலர்கள், வயலின் தோகைகள்
சுதந்திர சுபீட்ச சாகஸம் காட்டிட
ஆலையை, அணைகளை ஆலயம் ஆக்கினை!
அற்புத உழைப்பின் விழிப்பே ஆனாய்!

ராணுவ நிழல்கள் தற்காப் பென்பதை
ரகசிய மற்ற முரசாய் ஒலித்தனை!
பேணுதல் அகிம்சைப் பேரரருள் ஒன்றால்
பிரபஞ்ச முனைகள் அனைத்தும் பிணைத்தனை!

பூகோளப் பௌதிக எல்லைகள் எல்லாம்
பொல்லாப் போலிக் கோடென மதித்தனை!
'ஏக வையப் பொதுமை வாழ்வே'
இன்றும், இனியும் உன்றன் கோஷம்!

அணுவின் திரள்களில் நஞ்சை அகற்றி
அமிழ்தம் கொணரவே நீ முயல் கின்றாய்!
துணிவும் நேர்மையும் கவசங்களாகும்,
துலைக்கோல் நெஞ்சால் நிமர்ந்தனை நீயே!

உலக வீதிகள் அனைத்திலும் அலைந்தேன்!
உயிரைச் சுமக்கும் பிரேதம் ஆனேன்!
கலகம், குழப்பம், மடமை இவையே
கண்களில் படிந்த காட்சி அழுக்குகள்!

'இன்பம்', 'அமைதி' இரண்டையும் தேடி
ஈன நாற்ற இருளில் புரண்டேன்!
அன்பை; பண்பை; அடக்கம் தன்னை
அறிவீன மாகக் கருதியே சிதைந்தேன்!

மதுவில், மங்கையில், மாத்திரை களுக்குள்
மாயா சுவர்க்கம் இருப்பதாய் உளைந்தேன்!
எதுவும் பொய்யே என்பதை உன்றன்
இனிய சன்னதி புகுந்ததும் உணர்ந்தேன்!

என்னில் என்னைக் காட்டினை அம்மா!
என்னையும் மகவாய் உன்னில் ஏற்றனை!
பொன்னை; பொழுதை; புத்தியை இழந்தே
பொட்டலாய் வந்தேன்! பூஞ்சோலை ஆக்கினை!

பாழ்த்த நெஞ்சாம்; காழ்த்த நெஞ்சாம்
பாலையில் நீ தான் பால்தேன் சுனையே!
வாழ்த்துகிறேன் வணங்குகிறேன்! வருகிறேன் தாயே!
வணக்கம்! வணக்கம்! கோடி வணக்கம்!!

வந்த 'ஹிப்பி' நான்! வழிப்போக் கன்தான்!
மாதா உன்னால் மறுபிறப் பெடுத்தேன்!
'இந்தியப் புழுதி' யே ஆன்மநோ யதற்கு
ஏற்ற மருந்தாய்க் எடுத்துச் செல்கிறேன்!

(1972)



## உன்னைப் போலவே..!

உன்னைப் போலவே அவள் இருப்பாள்!
ஒளியால் கிறுக்கிய
ஓவியம் போலவும் அவள் இருப்பாள்!
( உன்னைப் போலவே-!)

மின்னைச் சொடுக்கிய இடைஇருக்கும்! - அன்ன
மிதப்பாய்க் கர்வ நடைஇருக்கும்!
தென்னம் பாளை விரிப்பாகப் - பருவம்
தேடும் காதல் சிரிப்பிருக்கும்!
(உன்னைப் போலவே-!)

கொள்ளை அழகுப் பதுமை அவள்! - இளமை
குலுங்கும் பச்சைப் புதுமை அவள்!
பிள்ளை மனசுடன் கிளுகிளுப்பாள்! - அவள்
பின்னே புயலும் சிலுசிலுக்கும்!
(உன்னைப் போலவே-!)

யாழாய்த் துயின்றிட அவள்போனாள்! - துன்பம்
இமைகள் பயின்றிட அவள் போனாள்!
பாழாய் இருட்டாய்ப் போனாலும் - உன்றன்
பாவனை உயிர்ப்பாய் ஆனாளே...!
(உன்னைப் போலவே -!)



- 1948

## நூற்றுக்கு நூறு

பீஜிங்கின் மோகினியால் ஜாடை காட்ட
பிண்டிநவாப் காஷ்மீரில் வாலை ஆட்டி
வேகமுற மோகமுறப் பார தத்தை
விழுங்குதற்குக் கனாக்காணும் இந்த வேளை
தாகமதாய்ப், பசியுணர்வாய்; நாள மெல்லாம்
தகித்து வரும் நெருப்பலையாய் வீரம் ஒன்றே
ஏகமனப் பரித்தியாக வடிவில் மாறி
இதயமெலாம் சதிராடிப் பொங்க வேண்டும்!

தேசத்தின் தேவை எது? சரித்தி ரத்தின்
திருப்பம்எது ? எழுச்சிஎது ? என்ப தறிந்தே
மாசற்ற தனிவீரம் விம்மும் கொத்தாய்-
மாறாத பேரியல்பின்-பண்பின் சொத்தாய்-
நேசத்தை, அன்புறவை, மனிதப் பாங்கை
நீள்புவியைக் கனிவிக்கும் புனிதப் பணியை
ஓசையிடும் இலக்கியமே; கலையே - கூத்தே
ஓவியமே இந்நேரம் பிறக்க வேண்டும்!

எத்தனையோ தொல்லைகளைத் தாங்கிக் கொண்டே
இதயத்தை இரும்பாக்கி எல்லை ஓரம்
கொத்தவரும் சாவதற்கும் வாழ்த்துக் கூறிக்
குண்டுபட்டுக் குருதிசொட்டத் தாயின் மண்ணை
முத்தமிட்டே காத்து நிற்கும் வீரர் தம்மை
மூலவராய்க் காட்டுகின்ற கதைகளையே
சித்தரித்தால் சினிமாதான் வென்றிடாதா ?
தேசத்தின் விழிப்புக்கே உதவி டாதா ?

தடுத்திருக்கும் நான்குசுவர்க் குள்ளே நிகழும்
சம்பந்தி சண்டைகளை ரசிப்பதற்கோ;
படுத்திருக்கும் 'கும்' அழகி ஷிப்பான் நழுவப்
பாடுகின்ற 'ஸோலோ' வைக் கேட்பதற்கோ
எடுத்தணைத்துக் காதலியைக் கசரத் தாக்கும்
ஈனத்தைக் காண்பதற்கோ இதுவா நேரம் ?
அடுத்தடுத்துப் பகைறுமல் கேட்கும் போதும்
'அட்டைப்புலி சண்டை' களைக் காட்டலாமா ?

தர்மத்தின் தீபத்தை அணைப் பதற்கும்
சத்தியத்தின் வீணையதை முறிப்ப தற்கும்,
வர்மத்தை, வஞ்சகத்தைப் பண்ணை வைத்தே
வளர்க்கின்ற பேயர்கள் சூழும் நேரம்...
மர்மக்குகை, முகமூடிக் கூட்டந் தன்னை
'மாஸ்டர்' எனும் சொறிநாயால் கண்டுபிடிக்கும்
கர்மத்தைக் கதையாகக் காட்ட வந்தால் -
கருத்துள்ளோர் சிரிப்பார்கள் - வாயால் அல்ல !

"ஆற்றலொடு அளவினிலும் விரிந்த தான
அரியதொரு செல்வாக்கால் சினிமா இன்று
போற்றுகின்ற கலையாச்சு! அக்க லைதான்
புவிமக்கள் வாழ்வியலை; வடிவை எல்லாம்
மாற்றுகின்ற வலிவதையும் ஏற்கலாச்சு!
மாறாக அக்கலைதான் மாறும் போக்கை,
நூற்றுக்கும் நூறாக தீங்கே செய்யும்
நுவல்காமக்கொலைப் படத்தை ஒழிக்கவேண்டும்"

இவ்வாறு பத்தாண்டு முன்ன மேயே
இதயபிரான் பாரதத்தின் இமய நேரு
செவ்வியதோர் சினிமாவின் கருத்தரங்கில்
தெளிவாகச் செப்பியபின் மேலும் சொன்னான்:
"ஒவ்வாத கொலைகாமக் கதைப்ப டத்தை
ஒருதுளியும் தயங்காது; பரிவே இன்றி
அவ்வந்த அரசாங்கம் ஒழிக்க வேண்டும்!"
அன்றல்ல; இன்றைக்கும் இதுவே தேவை!

\- 1965



## பாதி ஆப்பிள்!

கவிதை என்பது...?
கவிதை என்பது...?
நினைவின் உயரம்!
கனவின் உத்தி!

அறிவின் பொய்கள்!
ஆத்மாவின் நிஜங்கள்!
அழுகையின் சிரிப்பு!
ஆனந்த அழுகை!

தெளிவுகளின் மயக்கம்!
விழிப்புகளின் தூக்கம்
பாறைச் சதைகளைச்
செதுக்கிக் கடைந்து

பூக்க ளாக்கும்
பூடக வித்தை!
மேக இருட்டை
வெட்டிப் பிளக்கும்

மின்னல் கைகளின்
மாய வாட்கள்!
வெள்ளி முளைத்தும்
விடியாத இரவு!

மலட்டுச் சுள்ளி
மிலாறு களுக்கும்
கர்ப்பம் கொடுக்கும்
காமச் சிறுத்தை!

அனாதை யான
கற்பனை கட்டும்
கடவுளின் தொட்டில்!
காகித ரட்சை!

ஆயிரம் சாய
அலைகள் அடிக்கும்
காயாத சமுத்ரம்!
ஆழப் பள்ளம்!

தொடுவானக் கொடிகளில்
பருவம் அடைந்து
கண்களைக் கூப்பிடும்
கசங்காத பூக்கள்!

புயலையும் நெருப்பையும்
புசித்துக் களிக்கும்
விசித்திர மான
வீட்டின் விருந்து!

'நேற்'றை வாங்கி
'இன்' றிடம் விற்று
அடையத் துடிக்கும்
'நாளை'ய லாபம்!

கடித்துக் கொண்டே
இருக்கும் போது
திருட்டுப் போய்விடும்
பாதி ஆப்பிள்!

- 1962



## அன்னை!

அன்னை என்பவள் நயன்றோ?
ஆருயிர் அனைத்தின் தாயன்றோ?
மின்னும் தியாக வாழ்வுககே
மெய்யாய் நீதான் முன்னோடி

ஒவ்வொரு உதயமும் வினாடிகளும்
உன்றன் பனியின் திருவிழாக்கள்
திவ்விய பவித்திர அர்ப்பணமே
தேவியுன சில உயிர்மூச்சு

கொள்வதனைத்துமே கொடுக்கின்றாய்
கொடுப்பதில் களித சிரிக்கின்றாய்
அள்ளிய தனைத்தும் விடுக்கின்றாய்
ஆத்ம பூரிப்பாய் நுரைக்கின்றாய்

நில முகிலாம் வுள்ளவன்
நினைக்கே வழங்கும் பிரசாதம்
காலம் முழுதும் உயிர்காக்கும்
காவிரி நதியின் உருவாச்சு

சத்தியம், நீதி கரைகளுக்குள்
தர்மமே உன்னில் வடிவெடுத்தே
நித்தமும் பொங்கிப் புள்வதுபோல்
நின்னில் ஒருதவம் நடக்குதம்மா

துளியே கிடைப்பினும் ஏற்கின்றாய்
தொடர்ந்து காயவும் தயங்கவில்லை
'எளிமை' 'அடக்கம்' 'தொண்டு' களின்
இலக்கியக் குரலே உன்முழக்கம்

வெள்ளமாய் சீறிப் பாய்ந்தாலும்
விரிகடல் கைகளில் அடங்குகிறாய்
உள்ளம் நெடுக் அருட்கொடையே
ஒரேயொரு எண்மாய் நீகொண்டாய்

தரிசுப் பாழை முத்தமிட்டே
தாவர சொர்க்கம் படைக்கின்றாய்
பரிசோ கூவியோ கேட்கவில்லை
பசியோ துயரோ காட்டவில்லை



## எமது வெளியீடுகள்...

சித்தர்களின் வரலாறு

சித்தர்களின் ஓலைச்சுவடி ரகசியங்கள்

ஞானப்பூங்கோதை

பித்ரு பூஜை

நவ பிருந்தாவனம்

தியானம்

ஸ்தோத்திர கதம்பம்

வாழ்க்கை நெறிமுறை

வழி இருக்க வருந்துவதேன்?

ஏ.எம்.ஆர். மந்திரச்சொல்

ரமணர்

இறைநிலை





தமிழுக்கும்
தமிழருக்கும்
தமிழகத்துக்கும்
தாங்கள்
ஏதாவது செய்திட
வேண்டுகிறேன்.
தங்கள்
எழுத்தாற்றல் கொண்டு.

முத்தமிழறிஞர்
தமிழக முதல்வர்

டாக்டர் கலைஞர்.